# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 2 விளைச்சல் : 8 திருவள்ளுவர் ஆண்டு 2051 சுறவத் திங்கள் - 2021

வானொலிக் கலைச்சொற்கள்!

ஓலைச்சுவடிகளில் மறைந்துகிடக்கும் கலைச்சொற்கள்!

‘அஞ்சல்’ புழக்கத்திற்கு வந்தது!

அகரமுதலி இயக்ககத்தில் இளைஞர்கள்!

ஆள்காட்டியே கணந்துள்!

நல் உறக்கமும் நீடு வாழும் நெறியும்!



# வானொலிக் கலைச்சொற்கள்

1. Audio - கேளலை
2. Transmitter - ஒலிபரப்பி
3. Broadcasting - ஒலிபரப்பல்
4. Radio - வானொலி அலை
5. Radio receiver - வானொலி ஏற்பி
6. Frequency modulation - அதிர்வெண்தகவேற்றம்
7. Communication cable - தொடர்புவடம்
8. Airwave - காற்றலை
9. Transistor - ஒருதிசை கடத்தி
10. Long waves - நெட்டலை
11. News monger - செய்தி பரப்புநர்
12. Shortwave - குற்றலை
13. Medium Waves - நடு அலை
14. Arial - வான்கம்பி
15. Carrier waves - தாங்கு அலை
16. Relay - அஞ்சல்
17. Replay - மறு ஒலிபரப்பு
18. Signal - குறிப்பலை
19. Channel - அலைவரிசை
20. Radio talk - வானொலிப் பேச்சு
21. Radio frequency - கதிரலை அலையெண்
22. Mixing waves - கலப்பு அலை
23. Radio telephone - வானலைத்தொலைபேசி
24. Radio photography - வானலை ஒளிப்படவியல்
25. Radio interference - வானொலிக் குறுக்கீடுகள்

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2051 - மார்கழி
சனவரி 2021

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

## ‘கலைச்சொற்கள்’ என்றால் என்ன ?

அன்பானவர்களே!

கடந்த மாதம் புதிய அலுவலகத்தின் வடிவமைப்பைப் பற்றி பேசினோம். இந்த மாதம் அலுவலகத்தில் நடைபெறும் முதன்மைப் பணியான சொல்லுருவாக்கத்தைப் பற்றி பேசுவோம்!

ஆங்கில – தமிழ் அகராதிகளில் ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்கள் பலவாறாக இருக்கும். அவை அந்தந்தக் காலத்திற்கேற்றவாறு உருவாக்கப்பட்டிருக்கும். அவை இந்தக் காலத்திற் கேற்றவாறு இலகுவாக, புரிந்துகொள்ளும் வகையில் வடிவமைக்கப்படுகின்றன. அவற்றைத்தான் நாம் கலைச்சொற்கள் என்கிறோம். ஒரு கலைச்சொல் எட்டு எழுத்துகளுக்குள் இருப்பதாக வடிவமைக்கப்பட வேண்டுமென்று சொல்லியல் அறிஞர்கள் அறிவுறுத்துகிறார்கள். இவற்றைத்தவிர, அறிவியல் அறிஞர்களால் வெளிநாடுகளில் கண்டுபிடிக்கப்படும் தொழில்நுட்பப் பெயர்களுக்கு நிகரான தமிழ்ச்சொற்கள் பலராலும் உருவாக்கப்பட்டுப் புழக்கத்திற்கு வரும் அல்லது அத்தொழில்நுட்பப் பெயர்களுக்குத் தமிழில் சொல் கண்டுபிடிக்க முடியாமல் ஆங்கிலத்திலேயே வழங்கப்பட்டு வரும். அவற்றிற்கெல்லாம் இலகுவான தமிழ்ச்சொற்களைக் கண்டறியும் பணியைத்தான் அகரமுதலி இயக்ககம் செய்து வருகிறது. கலைச்சொற்களை வடிவமைக்கும் பணி மிகவும் நுணுக்கமான பணியாகும். இருமொழிப் புலமையும், பன்மொழிப்புலமையும் மிக்கவர்களால்தான் இப்பணியைச் சிறப்பாக மேற்கொள்ள முடியும். மற்ற அலுவலகங்களைப் போல் இவ்வலுவலகத்தில் கோப்புப் பணிகளுக்கு முதன்மையான இடம் கிடையாது. சொல்லாய்வுப் பணியே முதன்மையான பணியாக நடைபெறுகிறது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நான்கு பதிப்பாசிரியர்கள், ஒரு உதவிப் பதிப்பாசிரியர், ஐந்து தொகுப்பாளர்கள் எனப் பத்துப் பேர் மட்டுமே சொல்லுருவாக்கப் பணிகளை மேற்கொண்டு வருகிறார்கள். இவர்கள் ஒரு மாதத்திற்கு உருவாக்கும் ஏறக்குறைய 1,200 கலைச்சொற்களையும் தமிழ்க் கலைக்கழகத்தின் ஒருங்கிணைப்பாளர் தொகுத்து வரிசைப்படுத்துகிறார். இவ்வியக்ககத்திற்குள் மாதம் இரண்டு முறை கூட்டப்பெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான மொழிபெயர்ப்பு முன்னாள் துணை இயக்குநர் திரு. கு. பாலசுப்பிரமணியன், ‘அறிவியல் ஒளி’ திங்களிதழின் ஆசிரியர் திரு. நா.சு. சிதம்பரம், முதுபுலவர் வெற்றியழகனார், சொற்பிறப்பியல் ஆய்வறிஞர் முனைவர் இரா.கு. ஆல்துரை, கல்லூரிக்கல்வி முன்னாள் உதவி இயக்குநரும், இந்நாள் வழக்குரைஞருமான திரு. அ. மதிவாணன் ஆகியோர் அடங்கிய குழு காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை சொற்களை ஆய்வுக்குட்படுத்தி மாதம் ஒன்றுக்கு, குறைந்தது 1,100 கலைச்சொற்களை ஏற்றுக்கொள்ளும். அந்தச் சொற்கள் ஏற்கெனவே வேறு அகராதிகளில் இடம் பெற்றுள்ளதா (De-duplication) என்று ஒருங்கிணைப்பாளர் தலைமையில் ஆய்வு செய்யப்படும். அதில் பல சொற்கள் நீக்கப்படும். நிறைவாக, தெரிவு செய்யப்படும் சொற்கள் இயக்குநரால் அரசுக்கு அனுப்பிவைக்கப்பட்டு அரசாணை பெறப்படும். அப்படி அரசாணை பெறப்படும் சொற்கள் இவ்வியக்ககத்தின் சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படும். இயக்ககத்தால் வடிவமைக்கப்படும் கலைச்சொற்கள் பல படிகளைத் தாண்டித்தான் பொதுமக்களின் பயன்பாட்டிற்கு வெளியிடப்படுகின்றன.

அந்த வகையில், இதுவரை நடைபெற்ற 76 கூட்டங்களின் வாயிலாக 25,700 கலைச்சொற்கள் உருவாக்கப்பெற்றுள்ளன. ஏற்கெனவே 19,000 கலைச்சொற்களுக்கு அரசாணை பெறப்பட்டுள்ளன. 3,700 கலைச்சொற்கள் அரசாணைக்காக அனுப்பி வைக்கப்பட்டுள்ளன. தற்போது 3,000 கலைச்சொற்கள் அரசாணைக்காக அணியமாக்கப்பட்டு வருகின்றன. ஏற்கெனவே பல அகராதிகளில் உள்ள சொற்களையும் சேர்த்து இதுவரை 3,85,788 சொற்கள் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. தற்போது உலகத் தமிழர்கள் சொற்குவை வலைத்தளத்தை அதிகமாகப் பயன்படுத்தத் தொடங்கியிருக்கிறார்கள். குறிப்பாக, சொற்குவை வலைத்தளம் வாயிலாக அகராதிகளைப் பார்க்கும் விழிப்புணர்வு இளைஞர்களுக்கு ஏற்பட்டிருப்பது மகிழ்ச்சியளிக்கிறது. இப்படி ஏட்டளவிலும், இணைய அளவிலும் கலைச்சொற்களாக இருப்பவை தற்போது மக்களின் புழக்கத்திற்கு வரத் தொடங்கியிருக்கின்றன. ‘பஸ்’சைப் பேருந்து என்றும், ‘கம்யூட்டரைக்’ கணினி என்றும், ‘நம்பரை’ எண் என்றும், ‘குட்மார்னிங்’கை வணக்கம் என்றும், ‘டாக்டரை’ மருத்துவர் என்றும் மாணவர்கள் பேசத் தொடங்கிவிட்டார்கள். மக்களும், மாணவர்களும், அறிஞர்களும் பேசும் தமிழ்மொழியில் அகரமுதலியின் கலைச்சொற்கள் இரண்டறக் கலந்து புதிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தி வருவதைத் தமிழ்கூறும் நல்லுலகம் நன்கறியும்.

பிறமொழிச் சொற்களின் கலப்பைத் தவிர்த்து, அவற்றிற்கு மாற்றாக நல்ல தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்தும் பழக்கம் ஒவ்வொரு தமிழருக்கும் ஏற்படுமாயின் தமிழ்மொழி வளமாகவே வாழும். தூய தமிழ்ச்சொற்களை மக்களின் புழக்கத்திற்குக் கொண்டு வரும் மொழி விழிப்புணர்வுப் பணியை அகரமுதலித்திட்ட இயக்ககம் மேற்கொண்டு, அதில் வெற்றியும் கண்டு வருகிறது.

தமிழில் பேசும் ஒவ்வொருவரின் வீட்டிலும் தமிழ் அகராதி கட்டாயம் இருக்க வேண்டும் என்ற இலக்கோடு மலிவு விலை தமிழ் அகராதிகளை உருவாக்கும் பணிகளை அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாக தமிழ்நாடு அரசு முடுக்கிவிட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சிக்கு அகராதிகளின் பங்களிப்பு என்ன என்ற கேள்விக்கு, தமிழ் அகராதிகளே தமிழை வளர்க்கும் என்பதே சரியான விடையாகும். சொல்வளமே மொழிவளம் என்பதால் மொழியின் உயிர்ப்புக்குச் சொற்களைப் பேச்சிலும், எழுத்திலும் பழக்கப்படுத்த வேண்டும். அதற்கு அகராதிகள் துணை நிற்கும். அன்னைத் தமிழ் வளர்ச்சிக்கு அகரமுதலியே ஆணிவேராகும்.

●

# அறிய வேண்டிய அரிய செய்தி - 8

## ஆள்காட்டி(யே) கணந்துள்

பழந்தமிழ் “முல்லைப்பண்” இப்பொழுது “மோகனராகம்” என்று பெயர் மாறி வழங்குவதைப் போல, காலவோட்டத்தில் பல உயிர்ப் பொருள், உணர் பொருள்களின் பெயர்கள் மாற்றமடைந்திருக்கின்றன. அவற்றில் ஒன்றுதான் கணந்துள் பறவையின் பெயர் மாற்றமும்.

கழக இலக்கியத்தில் கணந்துள் என்று வழங்கப்பட்ட பறவை இப்போது ஆள்காட்டி, ஆட்காட்டி என்று அழைக்கப்படுகிறது. இப்பெயரும் மருவி ஆக்காட்டி, ஆக்காண்டி என்றும் அழைக்கப்படுகிறது. கழக இலக்கியத்தில் இரு பாடல்களில் (நற்.212, குறுந்.350) கணந்துள் பறவை பற்றிய குறிப்புள்ளது. இப்பாடல்களில் சொல்லப்பட்டுள்ள வடிவும் பண்பும் ஆள்காட்டிப் பறவைக்கு மிகப் பொருந்துவதால் கணந்துளே ஆள்காட்டி என்றுதெளியலாம்.

### கணந்துள் பெயர்க்காரணம்

கணம் என்றால் கூட்டம் என்று பொருள். எனவே, கணந்துள் என்பதற்கு, கூட்டமாக வாழும் பறவை என்று பொருள் கூறும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, கணம் – கணந்துள் என்று அப்பெயர்க்கான வேர்ச்சொல்லையும் எடுத்துரைத்துள்ளது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியும் ‘Lapwing’ என்பதற்கு, கூட்டத் தொகுதியாக வாழ்கிற நீண்ட காலுடைய நீர்ப் பறவை வகை என்றே பொருள் கூறியுள்ளது. ஆனால், பி.எல்.சாமி “சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்” என்ற நூலில், “கண கணத்தல் என்றால் விட்டு விட்டு ஒலித்தல் என்று பொருள். கணந்துள் என்பதிலுள்ள உள் என்ற சொல் உள்ளான் போன்ற பறவை என்பதைக் குறிக்கும். எனவே கணந்துள் என்பது உள்ளானைப் போன்றிருக்கிற, விட்டு விட்டு “ஒலியெழுப்புகிற பறவை” என்று பெயர்க் காரணம் கூறியுள்ளார். மேலும், “ஆள்காட்டிக்குருவி “இட்டி இட்டி” என்று விட்டு விட்டு ஒலியெழுப்புவதாக மலையாளத்தில் கூறுவர் என்றும் அதனால் ஆள் காட்டிக்கு மலையாளத்தில் “இட்டி இட்டிக் குருவி” என்று பெயர் என்றும் பி.எல்.சாமி குறிப்பிட்டுள்ளார்.

### கணந்துள்–ஆள்காட்டி – வடிவும் பண்பும்

கணந்துள் (‘Lapwing’) என்பதை நீர்வாழ்ப் பறவை என்று கூறுவது பொருந்தாது என்றும், அது பாலை, முல்லை, மருதநிலப் பறவையாகத்தான்





இருக்க முடியும் என்கிறார் பி.எல்.சாமி.

“பார்வைவேட்டுவன் படுவல்வெரீஇ
நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி
சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்”

(நற்.212)

“ஆற்று அயலிருந்த இருந்தோட்டுஅ ஞ்சிறை
நெடுங்கால்கணந்துள் ஆளறிவுறீஇ
ஆறுசெல்வம்பலர் படைதலைபெயர்க்கும்
மலையுடைக் கான நீந்தி
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்தி சினோரே”

(குறுந்.350)

இவ்விரு பாடல்களிலும் உள்ள “நெடுங்கால்“ என்ற சொல்லால் கணந்துள் பறவைக்குக் கால்நீளம் என்பதை அறியலாம். மேலும், நற்றிணைப் பாடலிலுள்ள “புலம்பு கொள் தெள்விளி” என்றதொடராலும், குறுந்தொகைப் பாடலிலுள்ள “ஆளறிவுறீஇ” என்ற சொல்லாலும் கணந்துள் பறவை ஒலியெழுப்பி ஆள் வரவை அறிவிக்கும் இயல்பினது என்பதையம் அறியலாம். ஆளை அறிவிக்கும் அடிப்படையிலேயே மக்கள் நாளடைவில் கணந்துளை ஆள்காட்டி என்று அழைத்துள்ளனர். “இருந்தோடு” என்பதற்குக் “கூட்டம்” என்றுபொருள்.. கூட்டமாகவாழும் பறவை என்பதால் தான் குறுந்தொகைப் பாடல் “இருந்தோட்டு அஞ்சிறை” என்று குறிப்பிட்டுள்ளது. இப்பறவைகள் இனப்பெருக்கம் அல்லாத காலங்களிலும் குளிர் காலங்களிலும் 26 முதல் 200 பறவைகள் கூட்டமாக

வாழும்

ஆள்காட்டிப் பறவையின் அலகு ஆரம்பிக்கும் இடத்தில் தலையின் இரு பக்கங்களிலும் காணப்படும் தோல் போன்ற உறுப்பை (Watled) வைத்து இதனை மஞ்சள் மூக்கு ஆள்காட்டி, சிவப்பு மூக்கு ஆள்காட்டி என இருவகைப் படுத்தலாம். இவற்றில்,

மஞ்சள் மூக்கு ஆள்காட்டி – வறட்சியானபறம்பு, கற்பாங்கான இடங்களிலும், சிவப்பு மூக்கு ஆள்காட்டி – குளம், குட்டைகளின் அருகிலுள்ள பறம்புகளிலும் காணப்படும். இதிலிருந்து “ஆற்று அயலிருந்த இருந்தோட்டு அஞ்சிறை” என்பது சிவப்பு மூக்கு ஆள்காட்டி என்று அறியலாம்.

நாட்டுப்பாடலில் ஆள்காட்டி

கழக இலக்கியம் மட்டுமல்ல அக்கழக இலக்கியத்திற்கு அடிப்படையாக விளங்கும் எளிய மக்களின் நாட்டுப்புறப் பாடல்களிலும் ஆள்காட்டிப் பறவையின் வடிவும் பண்பும் நுட்பமாக எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

“ஆக்காட்டி ஆக்காட்டி ஆவாரம்பூ ஆக்காட்டி
எங்கே எங்கே முட்டையிட்டாய் ?
கல்லுத் துளைத்துக் கடலோரம் முட்டையிட்டேன்
இட்டது நாலு முட்டை பொறிச்சது மூனு குஞ்சு”

என்ற நாட்டுப் புறப் பாடலில், ஆவாரம்புவின் இதழ்களைப் போல மஞ்சள் நிறமான தோல் ஆள் காட்டியின் அலகைச் சுற்றி அமைந்துள்ள உண்மையும், ஆவாரம்பூ காணப்படும் வறட்சியான பறம்பு நிலங்களில் இப்பறவை வாழும் உண்மையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும், சிறு சிறுகற்களும், காய்ந்தபுற்களும் சூழ்ந்த இடத்தில் அச்சூழல் சார்ந்த நிறத்திலேயே ஆள்காட்டி முட்டையிடுவதால் அம்முட்டைகளும் அவற்றின் குஞ்சுகளும் அவ்வளவுஎளிதில் யார் கண்ணிலும் படுவதில்லை. இந்தஉண்மை “எங்கே எங்கே முட்டையிட்டாய் ?” என்ற வரியில் நுட்பமாக உணர்த்தப்படுகிறது. மரக்கிளைகளிலோ மரப்பொந்துகளிலோ கூடு கட்டாமல் தரிசு நிலங்கள், வயல் வெளிகள், மற்றும் நீர்வற்றிய இடங்களில் சிறியகற்கள் பலவற்றை ஒரு குழிவான தட்டுபோல் சேகரித்து அவற்றின் நடுவே முட்டையிடும். எனவே தான் “கல்லைத் துளைத்துக் கடலோரம் முட்டையிட்டேன்” என்று இப்பாடல் குறிப்பிடுகிறது. முட்டையிடும் நிலத்தின் நிறத்தைக் கண்டுணர்ந்து அதற்கேற்ப முட்டையின் நிறத்தைமாற்றும் ஆற்றல் இப்பறவைக்கு உள்ளது



என்று சொல்லப்படுகிறது. மஞ்சள் மூக்கு ஆள்காட்டி நான்கு முட்டைகளையே இடும் என்று பறவை நூலார் கூறுவதாக பி.எல்.சாமி குறிப்பிட்டுள்ளார். இப்பாடலிலும் “இட்டது நாலுமுட்டை” என்று குறித்திருப்பது வியப்பைத் தருகிறது.

ஆள்காட்டி பற்றிய பழமொழிகள்

ஆள்காட்டியின் கூட்டை எளிதில் யாரும் கண்டறிய முடியாது என்பதை உணர்த்தும் வகையில், “ஆள்காட்டி ஆகாசத்திலே கூடுகட்டுவது போல” என்ற பழமொழியும், ஆளைஅறிவுறுத்தும் இயல்பைக் குறிக்கும்வகையில், “ஆள்காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் பிடித்துக்கொடுக்கும்”, “ஆள்காட்டி தெரியாமல் திருடப் போகிறவன் கெட்டிக்காரனா ? அவன் காலடிபிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனா ?” என்னும் பழமொழிகளும் வழங்கப்படுகின்றன.

சிவப்புமூக்கு ஆள்காட்டி குரலெழுப்புவது என்பது கத்துவது போல் இருக்கும் என்று பறவை நூலார் குறித்துள்ளதாக பி.எல்.சாமி குறிப்பிட்டுள்ளார். இட்டி இட்டி என்று ஒலியெழுப்புவதால், “இட்டி இட்டிக் குருவி” என்று மலையாளத்தில் வழங்கப்படுகிறது ஆள்காட்டிக் குருவி.

நிறைவாக, கழக இலக்கியத்தில் கணந்துள் என்றழைக்கப்பட்ட பறவையின் பெயர் மாறியிருந்தாலும் அப்பெயரும்கூட அதன் பண்பின் அடிப்படையிலேயே அமைந்து இன்றளவும் வழங்கப் படுகிறது என்பதை இதன் மூலம் அறியலாம்.

முனைவர் வே.கார்த்திக்
தொகுப்பாளர், அகரமுதலி இயக்ககம்

❖



# ஓலைச்சுவடிகளில் மறைந்து கிடக்கும் தமிழ்க் கலைச்சொற்கள்!

## – அமைச்சர் பேச்சு

தாம்பரம் தேசிய சித்த மருத்துவ நிறுவனம் மற்றும் தமிழ்நாடு அரசு அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் "தமிழும் தமிழ் மருத்துவமும்" குறித்த விழிப்புணர்வு விழா சித்தர்திருநாளாக 31.12.2020ஆம் நாள் கொண்டாடப்பட்டது.

தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தில் நடைபெற்ற இவ்விழாவில் பங்கேற்றுப் பேருரையாற்றிய மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு. க. பாண்டியராசன் அவர்கள், "புரட்சித்தலைவி அம்மாவின் வழி நடக்கும் ஆட்சியில், முன்பு எப்போதும் இல்லாத அளவிற்குத் தமிழ்வளர்ச்சிப் பணிகள் நடைபெற்று வருகின்றன என்பதற்கு நட்சத்திரத் திட்டமான 'சொற்குவை'த் திட்டம் சான்றாக இருக்கிறது என்றும், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் 2018–ஆம் ஆண்டு சொற்குவைத் திட்டத்தை அறிமுகப்படுத்தி, அத்திட்டத்தை உலகத் தமிழர்களிடம் கொண்டு சேர்த்திருக்கிறார் என்றும் கூறினார்.

அம்மாவின் ஆட்சிக்காலம் தமிழ்மொழியின் பொற்காலம் என்னும் வகையில் அகரமுதலி இயக்ககம் மற்றும் தமிழ் வளர்ச்சித் துறை வாயிலாக இதுவரை 90 விருதுகள் வழங்கப்படுகின்றன என்றும், இதனைத் தமிழர்கள் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்" என்றும் தெரிவித்தார்.

### பண்பாட்டு ஆய்வு அசைவை நிறுத்தியது!



புகழ்பெற்ற பண்பாட்டு ஆய்வாளரும் மானிடவியல் ஆய்வாளரும் தமிழறிஞருமாகிய பேராசான் முனைவர் தொ.பரமசிவன் அவர்கள் 24.12.2020ஆம் நாள் மறைந்தார். அறியப்படாத தமிழகம், பண்பாட்டு அசைவுகள், தெய்வம் என்பதோர், வழித்தடங்கள், சமயங்களின் அரசியல் உள்ளிட்ட பல நூல்களை வழங்கிய இவரின் மறைவு தமிழ் ஆய்வுலகிற்குப் பெரும் பேரிழப்பாகும்.




இன்றைக்கு ஆயிரக்கணக்கான இளைஞர்கள் அகரமுதலி இயக்ககத்துடன் இணைந்திருக்கிறார்கள் என்றும், பேரறிஞர் அண்ணாவிற்குப் பிறகு தமிழ்மொழியைச் 'சொற்குவை'த் திட்டம் வாயிலாக இளைஞர்களிடம் சேர்த்து, பெரும்புரட்சியைச் செய்திருக்கும் தமிழக முதலமைச்சர் அண்ணன் எடப்பாடியார் அவர்களுக்குத் தமிழர்களின் சார்பில் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதாவும் அமைச்சர் தெரிவித்தார்.

மேலும், சித்த மருத்துவம் என்பது குழந்தைகள் முதல் பெரியவர் வரை அனைவருக்கும் பொருந்தக்கூடிய இலகுவான, எளிதில் கிடைக்கக் கூடிய பொருள்களைக் கொண்டு செய்யக்கூடிய எளிமையான மருத்துவ முறையாகும் என்றும், சித்த மருத்துவம் உடலுக்கு எளிய மருத்துவம். ஆனால், நோய்க்கும் நோய் நுண்ணுயிரிகளுக்கும் வலிய மருத்துவமாகும் என்றும் கூறிய அமைச்சர், குறைந்தது **5000** ஆண்டுகள் தமிழரின் வாழ்வியலோடு பின்னிப் பிணைந்து சமுதாயத்திற்குப் பயன்பட்டு வரும் சித்த மருத்துவமானது "அண்டத்தில் உள்ளதே பிண்டத்தில்" என்பதை அடிப்படையாகக் கொண்டதாகும் என்று கூறினார்.

நிலம், நீர், காற்று, தீ, வான் எனும் ஐம்பூதங்கள் அண்டத்தில் உள்ளதாகவும் பிண்டம் எனும் உடலிலும் இந்த ஐம்பூதங்கள் தான் எலும்பு, தசை, குருதி, மூளை போன்ற கட்டமைப்புகளை உருவாக்குகின்றன என்றும் கூறிய அமைச்சர், உடலில் ஏற்படும் ஐம்பூத ஏற்ற இறக்கத்தை அண்டத்தில் உள்ள ஐம்பூதப் பொருள்களைக் கொண்டு சீராக்கி, உடலை நோய் நிலையிலிருந்து விடுவிப்பதே சித்த மருத்துவமாகும் என்று தெரிவித்தார்.

மேலும், "உணவேமருந்து; மருந்தே உணவு" என்பது சித்த மருத்துவத்தின் தனிச்சிறப்பு என்றும், முறையான அளவான உணவு, அதையும் செரித்த பின் உண்பது என்றிருந்தால் நோயின்றி நூறாண்டு வாழலாம் என்கிறது சித்த மருத்துவம் என்றும் கூறினார்.

சிக்கன் குன்யாவுக்கு நிலவேம்புக் கசாயம் சிறந்த மருந்தாக அமைந்ததைச் சுட்டிக்காட்டிய அமைச்சர், பச்சிலை, கீழாநெல்லி, ஆமணக்கு இலைக் கொழுந்து, கரிசலாங்கண்ணி, பப்பாளிச்சாறு, மஞ்சள், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய் போன்றவை எளியோர்க்கும் எளிதில் கிடைக்கும் மருந்துப் பொருள்களாகும் என்று கூறியதோடு, கொரோனா எனும் தீநுண்மியால் உலகமே உயிர் அச்சத்தால் உறைந்து கிடக்கும்போது தமிழ்நாட்டில் ஏழைகள் முதல் பணக்காரர்கள் வரை அனைவருக்கும் ஆறுதலாகவும் ஆபத்து நீக்கும் அருமருந்தாகவும் வாய்த்தது கபசுரக் குடிநீர் எனப்படும் சளிக்காய்ச்சல் நீக்கக் குடிநீரே என்றால் அதன் மூலம் சித்த மருத்துவத்தின் சிறப்பை உணரலாம் எனபதனை எடுத்துரைத்தார்.

சித்தர் திருநாளின் நோக்கம் வெற்றியடைய வேண்டுமானால் சித்தர்களால் அருளப்பட்டு, ஓலைச் சுவடிகளாய் இருளில் அடைபட்டுக் கிடக்கும் மருத்துவக் குறிப்புகளை உலகமக்களின் பயன்பாட்டுக்குக் கொண்டுவரும் முயற்சிகளை உடனடியாக நாம் முன்னெடுக்க வேண்டும் என்றும், தமிழ் மருத்துவச் சொற்களையும், அவற்றின்



பொருள்களையும் சொற்குவையில் பதிவேற்றி உலக மக்களிடம் அவற்றைக் கொண்டு சேர்க்கவேண்டும் என்றும் கூறிய அமைச்சர், அதற்காகத்தான் அகரமுதலித்திட்ட இயக்ககமும், தேசிய சித்தமருத்துவ நிறுவனமும் இணைந்து புரிந்துணர்வு உடன்படிக்கை செய்து கொண்டு சமூக நோக்குடன் பொதுமக்களுக்கும், அறிஞர் பெருமக்களுக்கும் பயன்படும் வகையில் இத்திட்டத்தைக் கையிலெடுத் திருக்கின்றன என்று தெரிவித்தார்.

விழாவில் தலைமையுரையாற்றிய செங்கல்பட்டு மாவட்ட ஆட்சியர் திரு. அ. ஜான்லூயிஸ் இ.ஆ.ப., அவர்கள், இந்த உடல் நாம் மனிதர் என்பதற்கு அடையாளம். நாம் பேசும் மொழி நாம் தமிழர் என்பதற்கு அடையாளம். இந்த இரண்டையும் இணைத்து ஒரு விழாநடத்துவதும், அதுவும் நடுவண் அரசும், மாநில அரசும் இணைந்து நடத்துவதை மிகவும் சிறப்பானதாகக் கருதுவதாகக் கூறினார்.

அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தினைப் பல்வேறு தரப்பினரும் பயன்படுத்தி வருகிறார்கள் என்றும், இந்த இயக்ககம் இதுவரை தமிழ்நாடு முழுவதும் சென்று **30** ஆயிரம் மாணவர்களைச் சந்தித்து மொழி விழிப்புணர்வை ஊட்டியிருப்பதன் பயனாகப் பள்ளிக் குழந்தைகளிலிருந்து கல்லூரி மாணவர்கள் வரை தூயதமிழில் பேசுவது சிறப்பாகவும் வியப்பாகவும் இருக்கிறது என்றும் தெரிவித்தார். மேலும், இந்த இயக்ககத்தில் தமிழ்ச்சொற்களுக்கான ஐயங்களைத் தீர்த்து வைக்கும் தீர்ப்பாயமாகச் சொற்குவை–கட்டணமில்லா அழை மையம் செயல்பட்டு வருவதைத் தாம் நன்கு அறிவேன் என்றும், இப்படிப்பட்ட திட்டங்கள் தான் தமிழை உயிர்ப்புடனும், விழிப்புடனும் வைத்திருப்பதாகத் தாம் கருதுவதாகவும் தெரிவித்தார்.

இவ்விழாவில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக இயக்குநர் திரு. தங்க. காமராசு அவர்கள் நோக்கவுரையாற்றினார். தேசிய சித்த மருத்துவ நிறுவனத்தின் இயக்குநர் மரு.இரா. மீனாகுமாரி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த, பேரா.மரு. ஞா.ஜா.கிறிஸ்டியன் நன்றியுரை கூறினார். நிகழ்வை மரு.இராதிகாமாதவன் தொகுத்து வழங்கினார். விழாவில் இரு நிறுவனங்களுக்கிடையே புரிந்துணர்வு உடன்படிக்கை கையெழுத்தானது. "சொல் உண்டியலை" மாண்புமிகு அமைச்சர் அவர்கள் திறந்து வைக்க, மருத்துவ மாணவ–மாணவியர் பலகலைச் சொற்களைச் சொல் உண்டியலில் வழங்கினார்கள். விழாவைச் சிறப்புற நடத்திய தேசிய சித்த மருத்துவ நிறுவனத்திற்கு மாண்புமிகு அமைச்சர் அவர்கள் பாராட்டுச் சான்றிதழை வழங்கிச் சிறப்பித்தார்.

# ‘தொலைந்து போன அஞ்சல் புழக்கத்திற்கு வந்தது’

அந்தக் காலத்தில், அடுத்த நாட்டிற்கு அனுப்பும் அரசனின் செய்தியை ஓலைவடிவில் ஒரு குதிரை வீரன் எடுத்துச் செல்வான். அடுத்த எல்லையில் எப்போதும் அணியமாகக் காத்திருக்கும் இன்னொருவீரன் அதை வாங்கிக் கொண்டு அடுத்த எல்லை வரை செல்வான். இவ்வாறே விரைவாக இலக்கைச் சென்றடையும் அந்த மடல்.

இவ்வாறு மடல் செல்லும் முறைக்கு ‘அஞ்சல்’ என்றுபெயர். சில நூற்றாண்டுகளுக்கு முன் சிற்றிலக்கிய வகையில் தோன்றிய ‘பணவிடுதூது’ என்ற இலக்கியத்தில் இந்தச் சொல் இடம் பெற்றிருப்பதாகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி 1985–இல் இடம்பெற்றிருந்தது.

’’ஓலை பிடித்தஞ்சலிலே யோடி’’ (பணவிடு.281) ‘அஞ்சல்’ பெ. (n.) 1. சாலைக்கடத்தத்தில் (Road Transport) குறிக்கப்பட்ட இடந்தொறும் வண்டிக் காளை அல்லது சுமையாள் மாற்றப்படும் ஏற்பாடு; relay. 2. கடிதஅஞ்சல்; letter, post என்று முதல் பொருளாக அதில் வெளியிடப்பட்டிருந்தது.

இதற்கடுத்தபடியாக கிரியா வெளியிட்டிருந்த ‘தற்காலத் தமிழ் அகராதி’யில் 1985–ஆம் ஆண்டிலேயே ‘அஞ்சல்’ என்பதற்கு கடிதம் முதலியவை அனுப்பும் முறை postal system என்றும், 2008–இல் வானொலி, தொலைக்காட்சி ஒரு நிகழ்ச்சியை ஒலிபரப்பி மற்ற நிலையங்களில் பெறப்படும் முறை Relay என்றும் பொருள் கொடுக்கப்பட்டிருந்தது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் மடல் பரிமாற்றம் Relay என்ற பொருளிலும், கடித அஞ்சல் என்ற பொருளிலும் வெளியிடப்பட்டிருந்தது. அதைத் தொடர்ந்து கிரியாவும் ‘மடல்’ முறை என்ற பொருளிலும் ஒலி–ஒளிபரப்பை வாங்கி இன்னொரு நிலையம் ஒலி–ஒளிபரப்பும் முறை என்றும் வெளியிட்டிருந்தது.

தமிழில் சிற்றிலக்கியம் பயன்படுத்திய பின் பல நூற்றாண்டுக்குப் பிறகு ‘அஞ்சல்’ என்ற சொல்மக்கள் வழக்குக்கு வந்ததாக அகராதிகள் வெளியிட்டிருந்தன. இச்சொல் மக்கள் வழக்குக்கு மீண்டும் எப்போது வந்தது என்பது அதுவரையில் அறியாமல் இருந்தது. யார் இந்த அஞ்சலை மக்கள் வழக்குக்குக் கொண்டு வந்தது ?

இதற்கிடையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககம் நடத்திவருகிற தமிழ்க் கலைகழகத் தொடர்கூட்டங்களின் 76–ஆம் கூட்டம் 22.12.2020 அன்று அகர முதலித் திட்ட இயக்ககத்தில் நடந்தது. சென்னை வானொலி நிலைய நிகழ்ச்சித் தலைவர் திரு. பழ. அதியமான் அவர்கள் சிறப்பு அழைப்பாளராக அழைக்கப் பெற்றிருந்தார்.

அவர் வானொலி நிலையம் அறிமுகப்படுத்திய சில கலைச் சொற்களோடு வந்து அந்தக் கூட்டத்தில் சிறப்புரையான தன்னுரையில் அச்சொற்களைப் பற்றி கலந்துரையாடினார்.

என்னவியப்பு! அவர் கூறிய முதல் சொல்லே ‘அஞ்சல்’ தான்.

1938–இல் தில்லி வானொலி நிலையம் ஒலிபரப்பிய ஒருநிகழ்ச்சியை இந்தியாவில் பல வானொலி நிலையங்களும் பெற்று அதேநேரத்தில் மீள் ஒலிபரப்புச் செய்தன. அந்த நிகழ்வுக்கு ஆங்கிலத்தில் ‘Relay’ எனப்பெயர். இந்தி உட்பட இந்தியாவின் பலமொழிகளும் ‘Relay’ என்ற சொல்லையே அன்று பயன்படுத்திக் கொண்டன. தமிழில் அச்செய்தியை அதே நேரத்தில் மீள் ஒலிபரப்புச் செய்தற்குத் தமிழில் ஒரு கலைச்சொல் பயன்படுத்த வேண்டும் எனச் சென்னை வானொலி நிலையத்தார் எண்ணினர்.

அப்போது Relay என்பதற்குத் தமிழில் ‘அஞ்சல்’ என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. தில்லி வானொலி நிகழ்ச்சியைச் சென்னை வானொலி நிலையம் ‘தில்லி அஞ்சல்’ என்றபெயரில்ஒலிபரப்பியது.

வானொலியால் பரப்பப்பட்ட ‘அஞ்சல்’ நாளடைவில் Post Office மூலமாக அனுப்பப்பட்ட letterகளுக்கும் மாற்றம் செய்யப்பட்டது, letterகளெல்லாம் ‘அஞ்சல்’ ஆயின. Post Office அஞ்சலகங்கள் ஆயின. இடையில் ‘தபால்’ ‘தபால் நிலையம்’ என்ற பெயரில் இயங்கிய ‘தபால்’ என்ற உருது சொல்லைத் தமிழ் அஞ்சல் என இடப்பெயர்ச்சி செய்தது. ‘அஞ்சல்’ என்பதற்கு இப்போது இரண்டு பொருள் வழங்குகிறது. 1. Relay 2. Post. தொலைந்து போன ‘அஞ்சல்’ (மடல்) இப்போது தமிழ் மக்கள் கையிலெல்லாம் தவழ்கிறது. பல நிகழ்ச்சிகள் வானொலி நிலையத்தினின்று சென்னை வானொலி நிலையம் வழி அஞ்சல் செய்யப்படுகிறது.

மேலும் இணையம் அறிமுகமான இக்காலத்தில் இணையவழி அனுப்பப்படும் செய்திகள், மடல்கள், படங்கள் ஆகியன அனுப்பப்படும் முறைக்கும் ‘‘மின்–அஞ்சல்‘‘ (e-mail) என வழங்கப்படுகிறது. சிற்றிலக்கியத்தில் சிறுவழக்காக இருந்த அஞ்சல் தமிழ் மக்கள் வழக்கில் இன்று பெரு வழக்காக வழங்குகிறது.

முனைவர் மா. பூங்குன்றன்
பதிப்பாசிரியர், அகரமுதலி இயக்ககம்

# அரசு விழாக்கள் – சனவரி 2021



## வீரமங்கை வேலுநாச்சியார் (03.01.1730–25.12.1796)

வடநாட்டில் ஜான்சி ராணி தோன்றிய ஒரு நூற்றாண்டுக்கு முன்பே தமிழகத்தில் தோன்றி வெள்ளையருக்கு எதிராக வீரப் போர் புரிந்து வெற்றி கண்டவர் வீரமங்கை வேலுநாச்சியார். கணவன் இறந்ததும் உடன்கட்டை ஏறும் வழக்கம் உள்ள ஒரு காலக்கட்டத்தில், தன் கணவர் சிவகங்கைஅரசர் முத்து வடுகநாதரைக் கொன்ற வெள்ளையரைத் துணிவுடன் எதிர்த்து நின்று போரிட்டு வெற்றியும் பெற்று சுதந்திரதேவி போல அரசாண்டார். அவ்வீரமங்கை வேலுநாச்சியாரின் பிறந்த நாள் 2015ஆம் ஆண்டு முதல் சனவரி மாதம் மூன்றாம் நாள் அரசு விழாவாகக் கொண்டாடப்படுகிறது



## கர்னல் ஜான் பென்னிகுயிக் (15.01.1841–09.03.1911)

தென்தமிழகத்தின் உயிர்நாடியாக விளங்கும் முல்லைப் பெரியாறு அணையைப் பல இடையூறுகளுக்கு இடையிலும், அணையைக் கட்டி முடிக்க ஆங்கில அரசிடமிருந்து கூடுதல் தொகை கிடைக்காத நிலையில் தனது குடும்பச் சொத்துக்களை விற்று அதன் மூலம் கிடைத்த பணத்தைக் கொண்டு கட்டி முடித்து 1895ஆம் ஆண்டு பொதுமக்களின் பயன்பாட்டிற்காகவழங்கியவர் கர்னல் ஜான் பென்னிகுயிக். இவரின் தன்னலமற்ற பொதுத் தொண்டால் தேனி, திண்டுக்கல், மதுரை, சிவகங்கை மற்றும் இராமநாதபுரம் மாவட்டங்களில் உள்ள 2.23 இலட்சம் ஏக்கர் நிலங்கள் தற்போதும் பாசனவசதி பெற்று வருகின்றன. கர்னல் ஜான் பென்னிகுயிக் அவர்களின் பிறந்தநாளன்றுமுல்லைப் பெரியாறு கீழணையில் அமைக்கப்பட்டுள்ள அவரின் நினைவு மண்டபத்தில் உள்ள அவரது சிலைக்கு அரசு சார்பில் மாலை அணிவித்துச் சிறப்புச் செய்யப்படுகிறது.

## பாரத ரத்னா டாக்டர் எம்.ஜி.ஆர் (17.01.1917 – 24.12.1987)



இளமையிலேயே தன் குடும்பவறுமையின் காரணமாகப் பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டு நாடகங்களில் நடிக்க ஆரம்பித்த எம்.ஜி.ஆர். அவர்கள் ''இலவகுசா'' நாடகத்தில் நடித்து அனைவரின் பாராட்டையும் பெற்றார். எம்.ஜி.ஆர். நடித்தமுதல்படம் ''சதிலீலாவதி'' ஆகும். அண்ணாவின் ''இதயக் கனி'' எனப் போற்றப்படும் எம்.ஜி.ஆர். அவர்கள் திரைத் துறையிலும் அரசியலிலும் புகழின் உச்சம் தொட்டவர்.

இவர் 1967–ம் ஆண்டுத் தேர்தலில் பரங்கிமலைத் தொகுதியில் போட்டியிட்டார். எம்.ஜி.ஆர். அவர்கள் 1972இல் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தொடங்கினார். 1977 இல் நடந்ததேர்தலில் வெற்றி பெற்று ஆட்சியைப் பிடித்து முதலமைச்சரானார். 1981இல் மதுரையில் ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டினை நடத்தினார். ஏழை எளிய குழந்தைகள் படித்துப் பயன்பெற சத்துணவுத் திட்டத்தைக் கொண்டுவந்தார்.

எம்.ஜி.ஆரின் பிறந்தநாளன்று சென்னை காமராசர் சாலையில் அமைந்துள்ள அவரது நினைவிடத்திலும், சென்னை கிண்டியில் உள்ள தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர் மருத்துவப் பல்கலைக்கழகத்தில் உள்ள அவரது திருவுருவச் சிலைக்கும் அரசு சார்பில் மாலை அணிவித்துச் சிறப்புச் செய்யப்படுகிறது.

# அகரமுதலி இயக்ககத்தில் ஆயிரக்கணக்கான இளைஞர்கள்!

தமிழ் எனும் நாணயத்தின் இருபக்கங்கள் சொற்குவையும்! தொல்லியல் ஆய்வும்! என்று தூயதமிழ்ப் பயிலரங்க நிறைவு விழாவில் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் திரு.க. பாண்டியராஜன் அவர்கள் தெரிவித்தார்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்துடன் வேலூர் செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பு இணைந்து நடத்திய தூயதமிழ்ப் பயிலரங்க நிறைவுவிழா 20.12.2020 ஆம் நாள்நடைபெற்றது. இந்த இணையவழிப் பயிலரங்க நிறைவுவிழாவில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் திரு. தங்க. காமராசு அவர்கள் வரவேற்புரை வழங்கி இயக்ககச் செயல்பாடுகள் பற்றி எடுத்துரைத்தார்.

விழாவில் வாழ்த்துரை வழங்கிய தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் கோ. பாலசுப்ரமணியன் அவர்கள், உலகில் உள்ள இரட்டை வழக்கு மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று என்று தெரிவித்ததுடன், வளரும் தலை முறையினர் பேச்சுத் தமிழில் இயல்பாகப் பேசினாலே பிறமொழிக் கலப்பைத் தவிர்க்க முடியும் என்றுகூறினார்.

மேலும், தமிழ்மொழி ஆங்கிலம் போன்ற பிறமொழிக் கலப்பினால் தனது தனித்தன்மையை இழந்து கொண்டிருப்பதையும், இதனைக் களைந்து எடுக்கும் வகையில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் பல்வேறு போட்டிகளையும் பயிலரங்குகளையும் நடத்தி, பல விருதுகளையும் பரிசுகளையும் வழங்கி மக்களிடையேயும் மாணவர்களிடையேயும் விழிப்புணர்வை ஏற்படுத்திக் கொண்டு இருப்பது பாராட்டுக்குரியது என்று கூறினார். தூய தமிழ் மற்றும் தனித்தமிழ் குறித்த விழிப்புணர்வு மாணவர்களுக்கு இருக்கவேண்டும் என்று கூறிய துணைவேந்தர், இது குறித்துத் தமிழ் வளர் மையத்தின் மூலமாகப் பயிற்சி அளிக்க இருப்பதாகவும் கூறினார்.

விழாவில் சிறப்புரையாற்றிய மாண்புமிகு தமிழ்ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு.க.பாண்டியராஜன் அவர்கள், தனது தலைமையின் கீழ் செயல்படும்



மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல் துறை அமைச்சர் திரு.க. பாண்டியராஜன்



மாண்பமை துணைவேந்தர் முனைவர் கோ. பாலசுப்ரமணியன்

ஆறு தமிழ் இயக்ககங்களில் மிகச்சிறிய இயக்ககம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் என்றாலும் தூயதமிழ்ச் சொற்களை மையப்படுத்தி இளைஞர்களின் மனதில் தூயதமிழ் பற்றிய மிகப்பெரிய தாக்கத்தையும் ஊக்கத்தையும் ஏற்படுத்தி உள்ளது பாராட்டுக்குரிய செயல் என்றும் அகரமுதலி இயக்ககத்தில் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் இணைந்துள்ளார்கள் என்றும் பேசினார்.

சிந்துமாகாணத்தில் இருந்து கன்னியாகுமரி வரை 31 மொழிகள் தமிழிலிருந்து உருவெடுத்துள்ளதாக அறிஞர்கள் சான்றுகளுடன் கூறுவதாகவும், அரசியல் ரீதியாக வட்டார மொழிகள் தனித்தன்மை அடைந்து தனிமொழியாக உருவெடுப்பதாகவும் தெரிவித்தார். பழந்தமிழ்ச் சொற்களைப் புதுப்பித்துப் பயன்படுத்த வேண்டும் என்றும், தூயதமிழ் முயற்சி

மொழியின் சொற்பரப்பைக் குறுக்கி விடாதவகையில் அமையவேண்டும் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

சொல்படைப்புத்திறன் அறிஞர்களிடம் மட்டுமல்லாது இளைஞர்களிடமும் உண்டு என்பதற்குக் “கெத்து” என்ற சொல்லின் மீட்டுருவாக்கப் பயன்பாடு சிறந்த சான்று என்றும், இளைஞர்களால்தான் சமுதாயம் உள்வாங்கிக் கொள்ளும் வகையிலான சொற்களைப் படைக்க முடியும் என்றும் கூறினார். வட்டார மொழிச் சொற்களை மைய தமிழுக்குக் கொண்டு வரவேண்டும் என்று கூறிய அமைச்சர், தமிழ் என்னும் நாணயத்தின் இரு பக்கங்கள்தான் சொற்குவையும் தொல்லியல் ஆய்வும் என்றுகூறினார். கீழடி போன்ற தொல்லியல் ஆய்வுகள் தமிழர்களின் தொன்மையை விளக்கும் முயற்சி என்றும், சொற்குவை நம் மொழியின் எதிர்காலத்திற்கு உயிர் கொடுக்கும் திட்டம் என்றும் அமைச்சர் தெரிவித்தார்.



நிறைவாக, செந்தமிழ்த் திருத்தேர் அமைப்பின் இயக்குநர் திரு ச. திவாகர் நன்றியுரை கூற, கவிஞர் தூயவன் நிகழ்வை நெறிப்படுத்தினார். “செந்தமிழ்த் திருத்தேர்” எனும் வலையொளிப் பக்கத்தில் இந்நிறைவு விழாவை ஆயிரக்கணக்கான மாணவ– மாணவியரும் தமிழறிஞர்களும், தமிழார்வலர்களும் பார்த்து, கருத்துரை வழங்கினார்கள்.

திரு.ச.திவாகர்,
இயக்குநர், செந்தமிழ்த் திருத்தேர்

பிறமொழிக் கலப்பில்லாத தூய தமிழினை அடுத்ததலை முறையினருக்கு எடுத்துச் செல்லபள்ளி– கல்லூரி மாணவர்கள் ஒன்றிணைந்து உருவாக்கியதே செந்தமிழ்த் திருத்தேர் எனும் அமைப்பு.

இளைஞர்களிடையே தூய தமிழ் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையில் இவ்வமைப்பிலுள்ள தமிழ்ப்பற்று மிக்க மாணவர்களைப் பயிற்றுநர்களாக்கி, பள்ளி மற்றும் கல்லூரிகள் தோறும் சென்று தூயதமிழ்ப் பயிலரங்குகளை மேற்கொள்ள மாணவர்களால் மாணவர்களுக்காக என்ற திட்டம் அணியமாக்கப்பட்டு வருகிறது.

செந்தமிழ்த் திருத்தேர் என்னும் பெயரினை வடிவாக மாற்றி அதில் சொல் உண்டியலினையும் அகராதிகளையும் கொண்டுதமிழகம் முழுக்க வலம் வந்து மாணவர்களிடமிருந்து பெறும் புதியகலைச் சொற்களைச் சொல் உண்டியலில் சேகரித்து, தமிழக அரசின் சொற்குவைத் திட்டத்திற்குஅளித்தும், அகராதிகளிலுள்ள அரிய சொற்களை மாணவர்கள் மற்றும் பொதுமக்களிடம் பகிர்ந்தும் இந்தத் தேரோட்டத் திருவிழாவானது அமையவுள்ளது

எதிர்வரும் தைத்திங்களில் வேலூரில் நடைபெற உள்ள இவ்வமைப்பின் துவக்கவிழாவைத் தொட்டு, அகரமுதலி இயக்ககத்தின் துணையுடன் மாணவர்களால் மாணவர்களுக்காக என்று செந்தமிழ்த் திருத்தேரானது உலாவர இருக்கின்றது.

பயனாளர் உரை



விழாவில் தூயதமிழ்ப் பயிலரங்கத்தின் வாயிலாகப் பயன்பெற்ற மாணவ மாணவியர் சார்பாக க.தாரணி, செ.செந்தமிழ்அரசன் ஆகியோர் தங்கள் கருத்தை வழங்கினார்கள்

செல்வி க.தாரணி, ஈரோடு.



இந்தப் பயிலரங்கத்தின் மூலம் இன்றையசூழலில் நாம் பேசிக்கொண்டிருப்பது தூய்மையான தமிழ்மொழி அல்ல என்ற வியப்பிற்குறிய கருத்தினை உணர்ந்தேன். பிறமொழிச் சொற்களை அறிந்து அவற்றைக் களைந்து நமது தாய்மொழியான தமிழ்மொழியில் உரையாடிட விழிப்புணர்வு பெற்றுள்ளேன். இம்மாதிரியான பயிலரங்குகளை இணைய வழியில் மட்டுமின்றி அனைத்துக் கல்லூரிகளிலும் நேரில் சென்று நிகழ்த்தினால் உறுதியாக மீண்டும் ஒரு தனித்தமிழ்ப் புரட்சி ஏற்படுகின்ற சூழல் அதிகம் உள்ளது.

செல்வன் செ.செந்தமிழ்அரசன்

தமிழக அரசின் சொற்குவைத் திட்டத்திற்காகச் சொற்களை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் மாணவர்களுக்கு இந்த ஏழு நாள்களும் பொன்னான நாள்களே.

நம்முடைய அடையாளத்தை நாம் மறந்து போகின்ற இன்றைய சூழலில் நமது மொழியில் இவ்வளவு உள்ளதா ? நம்முடைய பண்பாடு இவ்வளவு சிறப்பிற்குரியதா ? நாம் அன்றாடம் பேசும் தமிழில் இவ்வளவு இருக்கிறதா ? என்று பலவிழிப்புணர்வுகளை இந்தப் பயிலரங்கம் என்னைப் போன்ற பல மாணவர்களிடையே ஏற்படுத்தியுள்ளது.



## வெண்பலகையில் கலைச்சொற்கள்

அகரமுதலி இயக்ககம் செயற்பட்டுவரும் நகர் நிருவாக அலுவலகத்தின் தரைத்தளத்தில் இயக்ககம் சார்பில் வைக்கப்பட்டுள்ள வெண்பலகையில் நாள்தோறும் 10 கலைச்சொற்கள் எழுதி வைக்கப்படுகின்றன. 11 தளங்களைக் கொண்ட நகர் நிருவாக அலுவலகக் கட்டடத்தில் இயங்கி வரும் பல்வேறு துறைசார்ந்த அலுவலர்களும் பணியாளர்களும் இதனைப் பார்த்து, பாராட்டுகளையும் தங்கள் கருத்துகளையும் வழங்கி வருவதோடு, தங்கள் அலைபேசிகளில் படம் எடுத்துச் செல்கின்றனர்.

### விரைவில் கட்டணமில்லா அழை மையம்

14469 என்ற எண்ணில் தொடர்பு கொள்வோருக்குத் தமிழ்ச் சொற்கள் குறித்த ஐயம் களைந்து வந்த அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை– கட்டணமில்லா அழை மையமானது அலுவலக இடமாற்றம் உள்ளிட்ட நிருவாகக் காரணங்களினால் தற்காலிகமாகச் செயல்படவில்லை. கூடிய விரைவில் இந்த அழை மையம் மீண்டும் பயன்பாட்டுக்கு வரும்.



**09.12.2020** ஆம் நாள் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் **75**ஆவது கூட்டத்தில் நிலா காமிக்ஸ் பதிப்பகத்தின் நிறுவனர் திரு. பொ.சரவணராசா சிறப்பு அழைப்பாளராகப் பங்கேற்றார். கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க. காமராசு, கலைக்கழக அலுவல்சார், அலுவல்சாரா உறுப்பினர்கள், கல்லூரி மாணவிகள் உள்ளிட்டோர் பங்கேற்றனர்




**22.12.2020** ஆம் நாள் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் **76**ஆவது கூட்டத்தில் சென்னை வானொலி நிகழ்ச்சித் தலைவர் முனைவர் பழ.அதியமான் சிறப்பு அழைப்பாளராகப் பங்கேற்றார். கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க. காமராசு, கலைக்கழக அலுவல்சார், அலுவல்சாரா உறுப்பினர்கள் உள்ளிட்டோர் பங்கேற்றனர்




# நல் உறக்கமும் நீடுவாழும் நெறியும்



மரு. தி. இலட்சுமிகாந்தம்
இணைப்பேராசிரியர், மருத்துவத்துறை
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்
சென்னை – 47.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
மனநலம் மண்ணுயிர்க்கு ஆக்கம்"

–திருமூலர்

என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க உடல், மனம் இரண்டும் ஒரே சீராக இயங்குவது நோயில்லா நெடுவாழ்விற்கு வழிகோலும். இந்தச் சீர்மைக்கு அடிப்படையாய் அமைவது நல்லுறக்கம்.

யூகி முனிவரின் பார்வையில் உறக்கம்

மனிதனின் உடல், உயிர் முதலியவற்றில் இயங்குகின்ற, 96 தத்துவங்களில் ஒரு தத்துவம் உறக்கம். இதனை யூகி வைத்திய சிந்தாமணி 800இல் 96 தத்துவ விளக்கப் பாடலாக நாம் காணலாம்.

"உறுதியாம் பூதாதியோரைந்தாம்.... என்று தொடங்கும் பாடலில்,

"தஞ்சவே ராகமெட் டவத்தையைந்து" என உறக்கத்தை ஐந்து அவத்தைகளில் ஒன்றாகக் கூறுகிறார்.

ஐந்து அவத்தைகளாவன நனவு (சாக்கிரம்), கனவு (சொற்பனம்), உறக்கம் (சுழுத்தி), பேருறக்கம் (துரியம்), உயிர்ப்படக்கம் (துரியாதீதம்).

தூக்கத்தின் கால அளவு:

- பிறந்த குழந்தையில் : 17 முதல் 18 மணி நேரம் / ஒரு நாள்.

இதில் பாதி நேரம் கனவில் (துரிதக் கண் அசைவுத் தூக்கத்தில்) கழிகிறது

- 5 வயதில் : 10 முதல் 12 மணி நேரம் / ஒரு நாள் மேற்கூறிய கால அளவில் 30% கனவில் (துரிதக் கண்ண சைவுத் தூக்கத்தில் கழிகிறது)

- சராசரி இளம் வயதில் : 7.75 மணி நேரம் / ஒரு நாள்

- கனவு, உறக்கம், பேருறக்கம் : வயது செல்லச் செல்ல படிப்படியாகக் குறைகிறது

"தூக்கம் என்பது நம் உடல் நல்ல நிலையில் இயங்குவதற்கும், நோயுற்ற, பழுதுபட்ட விலங்களைச் சரி செய்து சீரமைப்பதற்கும் தேவையான ஒன்று – அறிவியல் அறிஞர் பொர்சி.

மூளை, இதயம், நுரையீரல், சிறுநீரகம், இரைப்பை மற்றும் குடல் முதலிய உள்ளுறுப்புகளில் தூக்கத்தின் ஆட்சி:

மூளை :

கனவு என்று சொல்லப்படும் துரிதக் கண் அசைவுத் தூக்கத்தில் பெருமூளையில் அதிகமான நரம்புத் தூண்டல்களும், வளர்சிதை மாற்றமும் காணப்படும். தசைநார்களின் தூண்டப்பட்ட நிலை தாழ்வடைகிறது. உடல் வெப்பநிலை சீரமைப்புக்கான மெதுவான நரம்புத் தூண்டல்கள் முற்றிலுமாக நின்றுவிடுவதால் உடல் வெப்பநிலை மிகவும் குறைகிறது.

உறக்கம், பேருறக்கம் என்று சொல்லப்படும் மெதுவான அலை உறக்கத்தில் மூளையில் நரம்புத்தூண்டல்கள் குறைந்தும், மூளையின் வளர்சிதை மாற்றம் குறைந்தும் காணப்படும். உடல் வெப்பநிலை சீரமைப்புக்கான மெதுவான நரம்புத் தூண்டல்கள் உண்டாகின்றன.

இதயம்:

கனவுநிலையில் இதயத்துடிப்பின் வீதம் சீரற்று இருக்கும். உறக்கம், பேருறக்க நிலைகளில் இதயத்துடிப்பு எண்ணிக்கை, இதயத்தின் செயல்பாடுகள் மற்றும் இரத்த அழுத்தம் முதலியன குறைகின்றன.

நுரையீரல்:

சுவாச இயக்கங்கள் சீரற்று இருக்கும், உறக்கம், பேருறக்க நிலைகளில் சுவாச இயக்கம் குறைந்து காணப்படும். சுவாச எண்ணிக்கையும் குறையும்.

சிறுநீரகம்:

சிறுநீர் உற்பத்தி குறைகிறது. சிறுநீர் அடர்த்தி அதிகரிக்கிறது. அல்டோஸ்டீரோன் மற்றும் ஆன்டிடையூரிடிக் என்று சொல்லப்படும் சிறுநீர் வெளியாவதைத் தடுக்கும் ஹார்மோன்களின் சுரப்பு அதிகரிக்கிறது.

இரைப்பை மற்றும் குடல்:

இரைப்பை மற்றும் குடலின் இயக்கங்கள் குறைந்து காணப்படும். இரைப்பையின் அமிலச் சுரப்பும் குறைந்துவிடுகிறது. தூக்கத்தில் விழுங்குதல் என்ற வேகம் குறைந்து விடுவதால் (Swallowing reflex) தூக்கத்தில் கோழை வடித்தல் போன்ற செயல்கள் நடைபெறுகின்றன.

அதிக பகல் தூக்கம்: நவீன அறிவியல் ஒப்புநோக்கு:

அதிக பகல் தூக்கம் (நார்கோலெப்ஸி) என்ற நோய் நிலையில் தற்போது நடத்தப்பட்ட ஆய்வின்படி இம்மாதிரி நோயினால் பாதிக்கப்பட்ட மனிதரில் (Orexin) ஒரெக்சின் என்ற ஹார்மோனின் அளவு மூளையிலும், தண்டுவட நீரிலும் அளவுக்கு அதிகமாகக் குறைந்துள்ள நிலையை விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர். இது பதார்த்த குண சிந்தாமணி, மற்றும் ஜீவரட்சாமிர்தத்தில் வாதரோகப்படலத்தில் மூளை மற்றும் தண்டுவடம் சம்பந்தப்பட்ட 18 வாத நோய்கள் வரக்காரணமாகப் பகல் தூக்கம் உள்ளது என்ற கருத்துகளை ஆமோதிக்கும்படியாக அறிவியல் ஆய்வு முடிவுகள் உள்ளன.

தூக்கமும் நோய் எதிர்ப்புத் தன்மையும்:

- இரண்டர்லூக்கின் 1, புரோஸ்டாகிளான்டின் டி2 முதலிய சத்துகள் நோய் எதிர்ப்புத் தன்மையை உடலில் உண்டாக்கினாலும், அவைகளும் தூக்கத்தை உண்டாக்கும் காரணிகளாகச் செயல்படுகின்றன. நோய் எதிர்ப்புச் செயலுக்கும் தூக்கம் – விழிப்பு நிலைக்கும் உள்ள தொடர்பை இது காட்டுகிறது.

- தூக்கம் குறைவதால் அடிக்கடி ஜலதோஷம் வரும் வாய்ப்புகள் இருப்பதாக 153 பேரிடம் நடத்தப்பட்ட ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன.

- தடைப்பட்ட தூக்கத்தை உடைய குழந்தைகள், தூக்கமின்மை (Insomnia) மற்றும் அதிதூக்கம் (Hypersomnia) முதலியவைகளோடு கூடிய குழந்தைகள் நீண்டநாள் நோய்வாய்ப்படும் நிலை, உடல் எடை குறைதல், மனநோயால் பாதிக்கப்படும் நிலை மிகவும் சோர்வடைதல் முதலியவற்றால் பாதிக்கப்படுவதற்கான வாய்ப்புகள் தூக்கமின்மை (அ) அதிதூக்கம் முதலிய நோய்களால் பாதிக்கப்பட்டவர்களைக் காட்டிலும் இவர்களிடம் அதிகம் உள்ளதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

- தூக்கம் இரத்தத்தில் கார்டிசால் வெளியாவதைக் குறைக்கிறது

நித்திரையும், நினைவாற்றலும்:

தூக்கம் தன்னுடைய பணியைச் செவ்வனே செய்கின்றது. அது என்னவென்றால் தற்காலிக நினைவாற்றலில் சேகரித்து வைக்கப்பட்டுள்ள செய்திகளை முறைப்படுத்துதல், பதிவுகளாக மாற்றல், பின் அதனை நிரந்தர நினைவாற்றலில் பதியச் செய்தல் முதலியன மெதுவான அலை உறக்கம்'' அறிவித்தல் நினைவாற்றலின் (Declarative Memory) செயல்முறைகளுக்குக் காரணமாக உள்ளது.

அறிவித்தல் நினைவாற்றல் (Declarative Memory);

மொழி வடிவிலோ (அ) எழுத்து வடிவிலோ அறிவு சார்ந்த கருத்துகள் பதியவைக்கப்படும் நினைவாற்றல்.

துரிதக் கண்ணசைவு உறக்கம் செயல்முறை நினைவாற்றலின் (Processing Memory) செயல் முறைகளுக்குக் காரணமாக உள்ளது.

நித்திரை செய்யும் திசைகள்:

கீழ்த்திசையில் தலையை வைத்துப்படுப்பதனால் ஆரோக்கியமும், மேற்குத் திசையில் தலையை வைத்துப்படுப்பதனால் அற்ப நித்திரையும், வடக்குத் திசையில் தலையை வைத்துப்படுப்பதனால் ரோகமும் சம்பவிக்குமென்றும், அவை முறையே உத்தமம், மத்திம்ம, அதமமென்றும் சித்த மருத்துவம் கூறுகிறது.

படுக்கை அறையின் திசை:

தெற்கு மற்றும் மேற்குக்கு இடைப்பட்ட திசையில் அமைவது நல்லது.

படுக்கையின் திசை:

படுக்கை அறையின் தென்மேற்கு பகுதியில் இருப்பது நல்லது.

நவீன அறிவியல் ஒப்புநோக்கு:

எந்தப் பொருளின் மேல்பகுதியும், மனிதனின் தலை உட்பட வடதுருவத்தை குறிக்கிறது. எனவே வட திசையில் தலை வைத்துப் படுத்தால், இரு வட துருவங்களும் ஒன்றை விட்டு ஒன்று விலகிச் செல்லும் தன்மை உடையதால் நோய் நிலைகளை உண்டாக்கும். தூக்கம் கெடும். தென்திசையில் தலை வைத்துப் படுப்பதால் உடல் சுகப்படும் நிம்மதியான நித்திரை கிடைக்கும். நல்ல ஆரோக்கியம் கிடைக்கும். தென்திசையில் முடியாவிட்டால் கிழக்கு (அ) மேற்கு திசையில் தலைவைத்துப் படுக்கலாம்.

நித்திரை செய்யும் காலம் :

இரவில் தான் நித்திரை செய்ய வேண்டும், பகலில் நித்திரை செய்யக் கூடாது.

“நல்ல உறக்கம் நல்ல மனநிலையைத் தரும்
நல்ல மனநிலை நல்ல உடல் நலத்தைத் தரும்
நல்ல மன, உடல் நலங்கள் நல்வாழ்க்கையைத் தரும்''

என்ற பொன்மொழிகளை மனத்தில் இருத்தி, நம் சித்தர் பெருமக்கள் கூறிச்சென்ற நீடுவாழ் நெறிகளைக் கடைப்பிடித்து இந்திய நாட்டின் மாபெரும் சக்தியான மனித வளத்தின் நலம் காத்து இந்தியாவை வல்லரசாக உலக அரங்கில் உயர்த்துவோம்.

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சென்னை– 600 028.

### விலைப்பட்டியல்

| தொ. எண் | புத்தகத்தின் பெயர் | படி ஒன்றின் விலை ரூ. | கழிவு 35ரூ ரூ. | நிகர விலை ரூ. |
|---|---|---|---|---|
| | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி | | | |
| 1. | இரண்டாம் மடலம் இரண்டாம் பகுதி கா–கூ | 300/– | 105/– | 195/– |
| 2. | இரண்டாம் மடலம் மூன்றாம் பகுதி கெ–கௌ | 300/– | 105/– | 195/– |
| 3. | மூன்றாம் மடலம் முதற்பகுதி ச–சா | 300/– | 105/– | 195/– |
| 4. | மூன்றாம் மடலம் இரண்டாம் பகுதி சி–சூ | 300/– | 105/– | 195/– |
| 5. | மூன்றாம் மடலம் மூன்றாம்பகுதி செ–ஞௌ | 300/– | 105/– | 195/– |
| 6. | நான்காம் மடலம் முதற்பகுதி த–தா | 300/– | 105/– | 195/– |
| 7. | நான்காம் மடலம் இரண்டாம் பகுதி தி–தூ | 300/– | 105/– | 195/– |
| 8. | நான்காம் மடலம் மூன்றாம் பகுதி தெ–தௌ | 300/– | 105/– | 195/– |
| 9. | ஐந்தாம் மடலம் முதற்பகுதி ந–நா | 400/– | 140/– | 260/– |
| 10. | ஐந்தாம் மடலம் இரண்டாம் பகுதி நி–நீ | 400/– | 140/– | 260/– |
| 11. | ஐந்தாம் மடலம் மூன்றாம் பகுதி நு–நௌ | 400/– | 140/– | 260/– |
| 12. | ஆறாம் மடலம் மூன்றாம் பகுதி பெ–பௌ | 400/– | 140/– | 260/– |
| 13. | ஏழாம் மடலம் முதற்பகுதி ம–மா | 400/– | 140/– | 260/– |
| 14. | ஏழாம் மடலம் இரண்டாம் பகுதி மி–மூ | 400/– | 140/– | 260/– |
| 15. | ஏழாம் மடலம் மூன்றாம் பகுதி மெ–மௌ | 400/– | 140/– | 260/– |
| 16. | எட்டாம் மடலம் முதற்பகுதி ய–வ | 400/– | 140/– | 260/– |
| 17. | எட்டாம் மடலம் இரண்டாம் பகுதி வா–வீ | 400/– | 140/– | 260/– |
| 18. | எட்டாம் மடலம் மூன்றாம் பகுதி வெ–வௌ | 400/– | 140/– | 260/– |
| 19. | ஒன்பதாம் மடலம்– இணைப்பு மடலம் முதற்பகுதி அ–கௌ | 400/– | 140/– | 260/– |
| 20. | ஒன்பதாம் மடலம்– இணைப்பு மடலம் இரண்டாம் பகுதி ச–வௌ | 400/– | 140/– | 260/– |
| 21. | பத்தாம் மடலம் – அயற்சொல் முதற்பகுதி அ–ஔ | 400/– | 140/– | 260/– |
| 22. | பத்தாம் மடலம் – அயற்சொல் இரண்டாம் பகுதி க–டௌ | 400/– | 140/– | 260/– |
| 23. | பத்தாம் மடலம் – அயற்சொல் மூன்றாம் பகுதி த–வௌ | 400/– | 140/– | 260/– |
| 24. | பதினொன்றாம் மடலம் – தமிழ் அகரமுதலி வரலாறு | 300/– | 105/– | 195/– |
| 25. | பன்னிரண்டாம் மடலம் – தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள் | 400/– | 140/– | 260/– |
| 26. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 27. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |
| **மொத்தம்** | | 10,600/– | 3,715/– | 6,890/– |
| (ரூபாய் ஆறாயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூறு மட்டும்) | | | | |

குறிப்பு:

தொகையை ரொக்கமாக அல்லது வைப்பக வரைவோலையாக/காசோலையாக **The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai - 600 113.** எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க வகையில் வழங்கலாம். **(Payable at Chennai)** வகையில் அல்லது மின்னணு முறையில் தீர்வு செய்யலாம் **(through ECS Payment)**

**IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175**

**Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai-20.)**

# இயக்கக இடமாற்றம்
# புதிய முகவரி

இதுவரை சென்னை–தரமணி, உலகத்தமிழாராய்ச்சி நிறுவன வளாகத்தில் இயங்கி வந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் இடமாற்றம் செய்யப்பட்டு, தற்போது கீழ்க்கண்ட முகவரியில் இயங்கி வருகிறது.

**முகவரி**

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்
திட்ட இயக்ககம், நகர் நிருவாக
அலுவலக வளாகம், முதல்தளம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி.நகர்,
சென்னை – 600 028.
தொடர்பு எண் : 044–29520462, 29520509



# விலையில்லாத அகராதி ஆய்வு மலர் !



324 பக்கங்களுடன் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள அகராதி ஆய்வுமலர் 2019–இல் அகராதி ஆய்வறிஞர்களின் 65 ஆய்வுக்கட்டுரைகளும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வரலாறும், வளர்ச்சியும், இன்றைய செயல்பாடுகளும் வண்ணப்படங்களுடன் இடம்பெற்றுள்ளன. இம்மலரைக் கட்டுரையாளர்கள், இயக்ககத்துடன் தொடர்புடைய மாணவ–மாணவிகள், பேராசிரியர்கள், ஆராய்ச்சியாளர்கள், தமிழாசிரியர்கள் ஆகியோருக்கும், கல்லூரி–பல்கலைக்கழக நூலகங்கள் மற்றும் பொது நூலகங்களுக்கும் விலையில்லாமல் வழங்க அரசு அறிவுறுத்தியுள்ளது. எனவே மலரைப் பெற விரும்புவோர் தக்க சான்றுகளுடன் இயக்ககத்திற்கு நேரில் வந்து பெற்றுக்கொள்ளலாம்.

இயக்குநர்